Registered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 35—No. 11



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 35 | சுபகிருது கார்த்திகை 1962 நவம்பர் | இதழ் 11

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர்: அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ.,

உதவிப் பத்திராசிரியர்: மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

# செய்திச் சுருக்கங்கள்

## கந்தபுராணச் சொற்பொழிவுகள்

காஞ்சிபுரம் குமரகோட்டத்தில் 5—11—62முதல் ஓர் ஆண்டு காலம் ஒவ்வொரு திங்கள், செவ்வாய் வெள்ளிக் கிழமைகளிலும் மாலை 6 மணி முதல் 8 மணி வரை காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் திரு க. வச்சிரவேல் முதலியார், பி. ஏ. எல். டி, அவர்களால் கந்தபுராணச் சொற்பொழிவு நடத்தப்பெறும்.

மதுரையில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் அவர்களால் நிறுவப்பெற்ற கந்தபுராணப் பிரசங்க நிதியிலிருந்து கந்தபுராண விரிவுரை 29—10—62 முதல் 3—11—62 வரை காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகச் செயலர் திரு. வி. திருஞான சம்பந்த முதலியார் அவர்களால் நாடோறும் மாலை 6-30 முதல் 8-30 வரை நிகழ்த்தப் பெறும்.

## திருவாசக விரிவுரை நிறைவு விழா

சென்னை—குயப்பேட்டைக் கந்தப் பெருமானுர் ஆலயத்தில் 15—10—56 சனிவாரம் விசயதசமி தினத்தில் புலவர் திரு. பூ. சமரபுரி முதலியார் அவர்களால் தொடங்கி நடத்தப் பெற்று வந்த திருவாசக விரிவுரை நிறைவு விழா 20—10—62ல் நடைபெற்றது அவ்விழாவிற்குத் திரு. நல். முருகேச முதலியார் B. A. அவர்கள் தலைமை வகித்தார்கள். திரு.ச. சச்சிதானந்தம் பிள்ளை B.A.L.T. அவர்கள், புலவர் ந. ரா. முருகவேள் M. A., M. O. L. ஆகியோர் பாராட்டுரை வழங்கினுர்கள்.

## சந்தா நேயர்களுக்கு வேண்டுகோள்

சமாஜ உறுப்பினர்கள் தங்கள் சந்தாத் தொகையை டிசம்பர் மாதம் 31—12—62-க்குள் அனுப்பி வைக்க வேண்டுகின்ருேம். வி. பி. பி.யில் ஜனவரி மாத இதழை அனுப்புவதாயின், 75 புதுக்காசுகள் வீணுக அதிகம் செலுத்த வேண்டியிருக்கும். மணியார்டர் மூலம் சந்த அனுப்புவோர்: 1. தங்கள் முழுப்பெயர் 2. சந்தா எண் 3. தெளிவான முழு விலாசம் ஆகியவற்றைக் குறித்தனுப்புதல் வேண்டும்.

மலாய் நாட்டில் உள்ள சமாஜ அன்பர்கள் தங்கள் சந்தாத் தொகையைத் திரு. கே. இராமநாதன் செட்டியார், B.A., B.L., அவர்களிடத்தேனும் திரு. சிவநேயன் அவர்களிடத்தேனும் செலுத்திவிடலாம்.

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி :

செயலாளர் : சைவ சித்தாந்த மகாசமாஜம்,

12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 35 | சுபகிருது கார்த்திகை 1962 நவம்பர் | இதழ் 11

## வடஎல்லைப்போர்
## வெற்றிக்கு வழிபாடு நடத்துக!

(திரு. அ. சோ.)

இந்நாளைய உலகம் 'விஞ்ஞானவுலகம்' என்று பெரிதும் புகழ்ந்து பேசப்படுகின்றது. விஞ்ஞானம் இன்று பல்வேறு துறைகளிலும் வளர்ச்சியடைந்து விரிந்து பரவி வருகின்றது. விஞ்ஞான வளர்ச்சி பெரிதும் பாராட்டக் கூடியதுதான் என்பதில் ஐயம் இல்லை. ஆனால், அது தன் எல்லையும் அளவும் கடந்து வரம்பு மீறிச் செல்வதன் விளைவுதான் நல்லவர்களின் மனத்தினை நலியச் செய்கின்றது. 'அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சு'

" அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும் "

விஞ்ஞான வளர்ச்சியினால் பெரிய பெரிய நகரங்களும் கோடிக்கணக்கான மக்களும் ஒரு நொடிப் பொழுதில் அழிக்கப்படுதற்குரிய அணுக்குண்டு வகைகள் பலப்பல கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. ஒரு நாட்டினர் மற்றொரு நாட்டினர் மீது படையெடுத்துக் கோடிக்கணக்கான மக்களைக் கொல்லுதற்கு ஏற்ற வசதிகள் பெருகி வருகின்றன. வானவெளியிற் பறக்கக் கற்றுக் கொண்டு, பிற கோள்களுக்கெல்லாம் செல்ல முயன்றுவரும் மனிதன், தான் வாழும்

இம்மண்ணுலகில் அண்டை அயல்நாடுகளோடு ஒற்றுமைப் பட்டு வாழ வகையற்று, எப்போதும் போர் பூசல் பிணக்கு களிலேயே ஈடுபட்டு உழன்று வருந்தியலைகின்றான்.

விஞ்ஞானம் வெறும் மூளையை மட்டுமே பெருக்கியுள்ளது. மனிதனின் அன்பையோ, பண்பையோ, இருதயத்தையோ, அது சிறிதும் வளர்க்கவில்லை. மூளை மட்டுமே வளர்ந்து, இருதயம் வளராமல் இறைவனை மறந்துவரும் குறைதான் இன்றைய உலகத்தின் இடர்ப்பாடுகட்கெல்லாம் காரணம்!

“நாம் விஞ்ஞானிகள் மிகப் பலரைப் பெற்றிருக்கின்றோம்; ஆனால் மெய்ஞ்ஞானிகள் சிலரையேனும் நாம் பெற்றிருக்கவில்லை. அணுவின் மறை பொருள் நுட்பச் செய்திகளை நாம் அறிந்து கொண்டு விட்டோம். ஆனால் இறையருள் நூல்களின் அறிவுரைகளை அறவே புறக்கணித்து விட்டோம். நாம் வாழும் உலகம் அழிவைப் பயக்கும் அணுக்குண்டுத் துறையில் அசுரத் தன்மை வளர்ச்சி மிகப்பெரியதாய், ஒழுக்கத் துறையில் சின்னஞ் சிறியதொரு சவலைக் குழந்தைத் தன்மை பொருந்தி, மெலிந்து நலிந்து இருந்து வருகின்றது. நாம் போரினைப் பற்றி அறிந்துள்ள அளவுக்கு, அமைதியினைப் பற்றி அறிந்து கொள்ளவில்லை; ஒருவரையொருவர் கொலை செய்வது பற்றி அறிந்திருக்கின்றோமேயன்றி, இன்னும் நாம் ஒருவரை ஒருவர் விரும்பி அன்பு கொண்டு இன்பமாக வாழும் நெறியினைப் பயின்று கொள்ளவில்லை” என அறிஞர் ஒருவர் மிக மனம் வருந்தி நைந்து கூறுகின்றார். கடவுளை மறந்தால் நமக்கு உய்தியில்லை.

---

“We have too many men of science, too few men of God. We have grasped the mystery of the atom and rejected the ‘Sermon on the Mount’. Ours is a world of nuclear giants and ethical infants. We know more about war than about peace, more about killing than we know about living”

—General Omar N. BRADLEY.

"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவது அன்று! இவ்வுலகத் தியற்கை"

என்று புறநானூற்றுப் புலவர் ஒருவர் மனம் வருந்திப் பாடிய அதே நிலையில்தான், மனிதன் இன்னும் இழிசகு வுடன் இருந்து வருகின்றான். நம்மோடு "பஞ்சசீலக் கொள்கை" பற்றிப் பேசிக்கொண்டே, நம் இந்திய நாட்டின் வடக்கெல்லைப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொள்ள விருப்பி வஞ்சகத் தன்மையாகச் சீனதேசம் போர்ச் செயலில் இறங்கி முனைந்து முயன்று வருகின்றது. சீனன் ஆகிய காலன், இந்திய சுதந்திரம் ஆகிய மார்க்கண்டேயனை, மாய்க்க நினைக்கின்றான். கால காலனாகிய சிவபிரானின் திருவருள்தான் நமக்குத் துணைபுரிய வேண்டும்.

இரண்டாவது உலகப் பெரும் போர் அண்மையில் தான் முடிவடைந்தது. அதன் பயங்கர விளைவுகளும் கொடுமைகளும் இன்னும் கூடத் தணிந்தபாடில்லை. இதற்குள் நம் நாட்டின் மீதே சீனதேசம் வஞ்சகமாகப் போர் தொடுத்துள்ளது! இதன் விளைவுகள் எங்கே சென்று முடியுமோ? தெரியவில்லை.

எனவே, இனி உலகம் உய்யவேண்டுமாயின், மக்கள் பணபலத்தையும் படைபலத்தையும் நம்பியிராமல், இறைவன் அருள்பலத்தை நம்பி நல்வழியில் வாழத் தலைப்படுதல் வேண்டும். குறிப்பாக நம் இந்திய நாட்டிற்கு இதுபோது ஏற்பட்டுள்ள விபத்தினின்று, நாம் தப்பி உய்ந்து நலம் பெறவேண்டுமானால், நாம் எல்லோரும் இறைவனை நோக்கிப் பிரார்த்தனை புரிதல் நலம் பயக்கும். பிரார்த்தனையால் நாம் எல்லா நலங்களையும் பெறலாம்! வீரர்கள் நம் தாய் நாட்டிற்காக வீரமாகப் போர் புரியட்டும். பொது மக்களாகிய நாம், தேசபக்தியுடன் தேசப்பாதுகாப்புக்கான எல்லா உதவிகளையும் தியாகங்களையும் செய்ய முற்படுவோம்.

இப்போர் விரைவில் முடிவடைந்து உலகில் அமைதி நிலவுதல் குறித்து இறைவனை நோக்கி இந்திய மக்கள் அனைவரும் உளமாரப் பிரார்த்தனை செய்தல் வேண்

டும். ஆபிரகாம் லிங்கன் என்னும் பெரியார், அமெரிக்கா வில ஒரு பெரிய போர் மூண்டபோது, தம் நாடு வெற்றி பெறவும், உலகில் அமைதி நிலவவும், மக்கள் எல்லோரும் இறைவனை நோக்கிப் பிரார்த்தனை செய்யுமாறு, 1863-ஆம் ஆண்டில் ஒரு வேண்டுகோள் விடுத்தார். அச்செயல் இங்கு நாம் நினைவு கூர்தற்குரியது.

எனவே, சென்ற பிப்ரவரி மாதத்தில் 8 கோள்கள் மகர ராசியிற் கூடினபோது, அதன் விளைவாகத் தீங்கு ஏதும் நிகழாமல் இருத்தற் பொருட்டு, நாடு நகரம் பட்டி தொட்டி கோயில் வீடு ஆகிய எல்லா இடங்களிலும் மக்கள் வழிபாடு நடத்தியது போல, இப்போதும் நாம் நம் வடஎல்லைப் போரில் வெற்றி பெறவும், உலகில் அமைதி என்றும் நிலைத்து நிற்கவும் இறைவனை வழிபாடு செய்வோமாக! "இவ்வுலகம் கனவு காண்பதைவிடப் பிரார்த்தனையால் மிகுதி யான செயல்கள் நிறைவெய்துகின்றன" எனத் தேனிசை யன் என்னும் ஆங்கிலக் கவிஞர் பாடுகின்றார்.

"More things are wrought by prayer than this world dreams of"

நாம் நம் இந்திய நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாத் துக் கொண்டு, பிற வல்லரசுகளுக்கு அடிமைப்படாமல், சிறப்புற வாழ்வதற்குப் படைபலத்தைப் பெருக்கிக் கொள் வதோடு, இறைவனின் திருவருள் பலத்தையும் அடைய முயலுதல் வேண்டும். "கடவுளிடம் நம்பிக்கை வையுங் கள்! துப்பாக்கி மருந்தைக் காயவையுங்கள்!"

"Put your trust in God and keep your powder dry"

என்று ஆலிவர் கிராம்வெல் என்னும் பெருவீரன் கூறிய தற்கு ஏற்ப இறைவனையும் பிரார்த்தனை புரிவோம்; நம் தேசப் பாதுகாப்புக்காக எல்லா வகையான உதவிகளையும் தயங்காது செய்ய முனைவோம்!

'கோளறு திருப்பதிகம்' போன்ற 'இடர்களையும் திருப் பதிகங்களை' நாம் நாடோறும் ஓதி இறைவனை வழிபட்டு வருதல் மிகவும் அவசியம்.

# திருவல்லம்

—: (ந. ரா. முருகவேள்) :—

தொண்டை நாட்டிலுள்ள பாடல் பெற்ற தலங்களுள் திருவல்லம் என்பது ஒன்று. இதனை இப்போது திருவலம் என்று மக்கள் வழங்கி வருகின்றனர். விநாயகர் அம்மையப்பரை வலம் வந்து மாங்கனி பெற்ற வரலாற்றை இதனோடு இணைத்துக் கூறி, அதனால் இது திருவலம எனப் பெயர் பெற்றதென்றும் சிலர் கூறுவர். இத்தலம் சென்னையில் இருந்து, 75 கல் தொலைவில், சென்னை பெங்களூர் நெடுஞ் சாலையில், பாலாற்றின் கிளை நதியாகிய நுகாவின் மேற்குக் கரையில் அமைந்து விளங்குகின்றது. நுகா நதியினைப் 'பொன்னை' அல்லது 'நீவா' என்னும் பெயர்களாலும மக்கள் வழங்குகின்றனர்.

வல்லம் என்ற பெயரால் தமிழ் நாட்டில் ஊர்கள் பல உள்ளன. தமிழிலக்கண நூல்களில்,

" வல்லம் எறிந்த நல்லிளங் கோசர் தந்தை
மல்லல் யானைப் பெருவழுதி "

என்னும் தொடர் பயின்றுவரும். ஆதலின், அது போன்றன வற்றிற் பிரித்து இதனைத் தனியே கிளந்தெடுத்துக் குறிப் பிடுதற்கு, ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள் " தீக்காலிவல் லம் " என இதனை அடைமொழி புணர்த்து வழங்குவர். தீக்காலி என்னும் அவுணன் இங்கு இறைவனை வழிபட்டு அருள் பெற்றான். ஆகலின் இதற்குத் தீக்காலிவல்லம் எனப் பெயர்வழங்குவதாயிற்று. ஆண் மகப்பேறு எய்தாமல்பெண் மக்களையே மிகுதியாகப் பெற்ற அந்தணன் ஒருவன், அப் பெண்மக்கள் சிவத்தொண்டு செய்து உய்யுந்திறம் பெற, இறையருளை வேண்டி வழிபட்ட சிறப்பும் இத்தலத்திற்கு உண்டு.

---

* திருவல்லம், மாதாந்தர வழிபாட்டில் வித்துவான் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையிற் பேசியதனைத் தழுவியது. (21-10-62)

" தீது நீங்கிடத் தீக்காலி யாம்அவு ணற்கு
நாதர் தாம் அருள் புரிந்தது; நல்வினைப் பயன்செய்
மாதர் தோன்றிய மரபுடை மறையவர் வல்லம்
பூதி சாதனம் போற்றிய பொற்பினுல் விளங்கும் "

என்னும் பெரிய புராணச் செய்யுளால், இச்செய்திகள்விளங்கும். இறைவனுக்கு வல்லநாதர் என்றும் அம்மைக்கு வல்லாம்பிகை என்றும் பெயர் வழங்குகின்றது. தொண்டை நாட்டில் உள்ள மருதத் திணைக்குரிய தலங்களுள், திருவல்லம் திருமாற்பேறு திருப்பாசூர் என்னும் மூன்றினையும் சேக்கிழார் சுவாமிகள் சிறக்கெடுத்து இயம்பியுள்ளனர்.

திருவல்லம் கோயிலுக்கு "ஸ்ரீ இராஜ ராஜேசுவரம்" என்ற பெயர் வழங்கிய தென்பது கல் வெட்டுக்களால் அறியப் படுகின்றது. முதலாம் இராஜ ராஜ சோழனின் (கி. பி. 985 — 1014) 4ஆம் ஆட்சியாண்டில், அவன் கீழ் உயர் அலுவலாளனாக விளங்கியிருந்த ஈராயிரவன் பல்லவராயனால், இக்கோயிலின் கருவறை கட்டப் பெற்றது. சிற்றரசர்களும், படைத்தலைவர் முதலிய உயர் அரசியல் அலுவலாளர்களும், தமக்குத் தலைவனாகத் திகழும் பேரரசனின் பெயரால் அறங்கள் செய்தலும், கோயில்கள் எடுப்பித்தலும் உண்டு. தம்முடைய தலைவனாகிய பேரரசன்பால் தமக்குள்ள அன்பையும் நன்றியையும் காட்டுதற் பொருட்டு இங்ஙனம் அவர்கள் செய்வர். எனவே முதலாம் இராஜராஜ சோழன் எடுப்பித்த தஞ்சைப் பெருவுடையார் (பிருகதீசுவரர்) கோயிலைப் போல, இதற்கும் இராஜ ராஜேசுவரம் எனப் பெயர் ஏற்படுவதாயிற்று. எனவே திருவல்ல நாதர்க்கு " இராஜ ராஜேசுவரம் உடைய நாயனர் " எனவும் பெயர் வழங்கும்.

இராஜ ராஜ சோழனின் பெரிய பாட்டனாரும், பக்தி ஒழுக்கத்திற் சிறந்து பல கோயில்களை எடுப்பித்த செம்பியன்மாதேவி அம்மையாரின் கணவரும், திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர்களுள் ஒருவரும் ஆகிய சிவஞானகண்டராதித்தரின் புதல்வன் உத்தமசோழன் (கி. பி. 970—985)

தன் ஆட்சியின் 7ஆம் ஆண்டில் இக்கோயிலுக்கு வந்து வழிபட்டான். அப்போது 1000 குடங்களாற் பெருமானுக்குத் திருமுழுக்குச் செய்யப் பெற்றது என்னும் செய்தியும் கல்வெட்டாற் புலனாகின்றது.

இராஜ ராஜ சோழனின் தமக்கை ஆகிய குந்தவைப் பிராட்டியை மணந்து கொண்ட வல்லவரையன் வந்தியத்தேவன் என்பவர், இவ்வூரைச் சேர்ந்தவர் என அறிஞர்கள் கருதுகின்றனர். (வல்லம் + அரையன் = வல்லவரையன்), இஃது இவ்வூர்ப் பெருமக்கள் பெருமிதத்துடன் நினைத்து மகிழத் தகுந்த செய்தியாகும்.

திருஞான சம்பந்தர் காஞ்சிபுரத்தை வழிபட்டதன் பின்னர், திருமாற்பேறு சென்று இறைஞ்சித் திருவல்லத்திற்கு வந்து வணங்கினர். இங்கிருந்து இலம்பையங்கோட்டூர், திருவிற்கோலம், தக்கோலம் (திருவூறல்) முதலிய தலங்களை வழிபட்டார். சம்பந்தர் பாடிய தேவாரப் பதிகம் இத்தலத்திற்கு உள்ளது. அதன்கண் சுவாமிகள் இவ்வூரினைக் "கற்றவர் திருவல்லம்" என்று பாராட்டியிருப்பதும் நினைத்து மகிழ்தற்குரியது.

திருநாவுக்கரசர் இங்கு வந்ததாகத் தெரியவில்லை. அவரது பாடல் இத்தலத்திற்கு இல்லை. சேக்கிழார் பெருமான், திருநாவுக்கரசர் காஞ்சிபுரத்தில் தங்கிச் சில காலம் தொண்டு செய்து கொண்டிருந்தார் என்றும், அதுபோது திருமாற்பேறு அணைந்து தமிழ்பாடினர் என்றும், காஞ்சியினின்று திருக்கழுக்குன்றம் திருவான்மியூர் திருமயிலை திருவொற்றியூர் திருப்பாசூர் திருவாலங்காடு முதலிய தலங்களுக்குச் சென்றார் என்றும் தான் கூறியருளுகின்றார். திருவல்லம்பற்றி அவர் குறிப்பிட்டிலர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் காஞ்சிபுரத்திலுள்ள தலங்களை வணங்கிக் கொண்டு, வன்பார்த்தான் பனங்காட்டூரை வழிபட்டுத் திருமாற்பேறு சென்று, திருவல்லம் எய்தி இறைஞ்சினர். இங்கிருந்து திருக்காளத்தி சென்றார். இவ்வழிவகைகளையெல்லாம் சேக்கிழார் சுவாமிகள் ஏறத்தாழ

1000 ஆண்டுகளுக்கு முன்பே மிகத் திட்ப நுட்பமாக ஆராய்ந்து கூறியிருக்கும் திறம், நம்மனோரை வியப்பிலும் விம்மிதத்திலும் ஆழ்த்துகின்றது. சுந்தரரின் தேவாரத் திருப்பதிகம் இத்தலத்திற்கு இருந்திருத்தல் வேண்டும். ஆனால் அஃது இன்று நமக்குக் கிடைக்கப் பெறவில்லை.

ஞானமூர்த்தி என்ற ஒரு துறவியால் இக்கோயிலின் அர்த்த மண்டபம், சகம் 1236-இல் கட்டப் பெற்றதாகக் கல்வெட்டினால் அறிகின்றோம். இப்பொழுதும் ஸ்ரீ சிவானந்த மௌன சுவாமிகள அவர்கள், பெருமுயற்சி எடுத்து இரண்டு நூறாயிரம் வெண்பொற் காசுகளுக்கு மேல் மதிப்பிடத் தக்க திருப்பணியைத் திருவருளாற்றலால் செய்து வருவது, நமக்கு மிக்க வியப்பினை அளிக்கின்றது. இந்நாளிலும் திருவருள் ஊற்றுச் சுரந்து கொண்டுதான் இருக்கின்றது; அது வற்றிப் போய்விடவில்லை என்னும் உண்மையினைச் சுவாமிகள் அவர்களின் மூலம் உணர்ந்து நாம் இன்புறுகின்றோம்.

திருவானைக்கா என்னும் புகழ்பெற்ற சிவத்தலத்தில் இறைவனே ஒரு சித்தராக எழுந்தருளி அங்குள்ள திருமதிலைக் கட்டினர் என்றும், அம்மதில் கட்டுதற்குப் பணிபுரிந்த கூலியாளர்களுக்குத் திருநீற்றையே கூலியாக வழங்கினர் என்றும், அத்திருநீறு அவரவர்கள் செய்த உண்மையான வேலைக்குரிய கூலியளவு பொன்னாக மாறி வந்தது என்றும், அதனால் ஒருவரும் ஏமாற்ற முற்படாமல் ஒழுங்காக வேலை செய்தனர் என்றும், திருநீற்றையே கூலியாகக் கொடுத்துக் கட்டப்பெற்றதாதலின் அதற்குத் "திருநீற்றுத் திருமதில்" என்று பெயர் ஏற்பட்டதென்றும் பெரியவர்கள் கூறுவர்.

"எல்லாம் வல்ல தனதியல்பும்,
ஈண்டும் கருமம் தமக்கியைய
எல்லார் தமக்கும் பயன் உதவும்
இயல்பும், விபூதி எனும் பெயரைப்

புல்லா நின்ற திருநீற்றின்
பொலிவும் விளங்கக் கூலிக்கு
நல்லா தரவின் நீறளிப்ப
நயந்தார் நாவர் பெருமானுர் ''

தெளிக்கும் திருநீறே, தத்தம்
செய்கைக் கேற்பச் செழும்பொன்ருய்க்
களிக்கும் வகைசெய்து அறன்கடைகள்
கதுவா தொழிக்கும் பெருஞ்சிறப்பால்
வெளிக்கண் ஒருத்த ரைப்போல
விளையாட் டயரும் அமுதேசற்கு
ஒளிக்கும் வகைஇன் ருய்எவரும்
உறுதி யோடு பணிபுரிவார் ''

—திருவானைக்காப் புராணம்.
கச்சியப்ப முனிவர்.

திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் போன்ற வேறு பிற அருளாளர்களும், இங்ஙனமே திருநீற்றைக் கூலியாகக் கொடுத்துத் திருப்பணிகள் செய்தனர் எனக் கேள்வியுறுகின்ருேம். ஸ்ரீ சிவானந்த மௌன சுவாமிகள் திருநீறு அளித்து, அன்பர்களுக்கு அவரவர்கள் விரும்பும் நலம் விளைத்து, அவ்வாற்ருற் பொருள் தொகுத்து, இவ்வளவு பெருஞ் செலவில் இந்நாளில் இத்திருப்பணியை இத்துணைச் செம்மையுற இயற்றி வருவது, மிக வியக்கத் தக்க அரும்பெருஞ் செயலேயாகும்.

சுவாமிகள் நாயோடு ஒருங்கிருந்து உண்ணும் செயல் ஒருவகையிற் பத்திரகிரியாரையும், பேய்க் கரும்பு தித்திக்கப் பெற்ற செயல் பட்டினத்தாரையும் நமக்கு நினைவூட்டி நிற்கின்றது. சுவாமிகள் மௌன விரதம் பூண்டு பேசாமல் இருந்தே இவ்வளவு பெருந்திருப்பணியை மிக விரைவில் செய்து முடித்திருப்பது,

"பேசாமை பெற்றதனில் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெரும்பெருமான்—பேசாதே
எண்ணொன்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால்
உள்நின்றும் போகான் உளன்"

எனவரும் திருக்களிற்றுப்படியார் செய்யுள் போன்ற பல அருள்மொழிகளை, நம்மனோர் நினைவிற்குக் கொணர்கின்றது. மகாதேவ மலையில் திருப்பணி செய்துவரும் இவர்தம் குருவினையும், இன்று காலையில் நாம் வணங்கி மகிழும்பேறு பெற்றோம். "நீத்தார் பெருமை" என்பதனை இந்நாளினும் நாம் ஓரளவு உணர இப்பெருமக்கள் நமக்குத் துணை புரிகின்றார்கள்.

"பாலருடன் உன்மத்தர் பசாசர்குணம் மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்..."

என்பன முதலாகச் சிவஞான சித்தியார் கூறும் சிவஞானியர் இயல்புகள் (பக்கம் 284, 285) ஒருசில சுவாமிகள் இடத்தில் காணப்படுகின்றன.

"உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து"

என்னும் திருக்குறளைச் சுவாமிகளின் நிலை நமக்கு அறிவுறுத்துகின்றது. அருளாளர்களின் (Saints and mystics) தவ ஆற்றலினை நம்மனோர் அளவிட்டுரைத்தல் இயலுமோ?

"கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே"

"மந்தி சீக்கும் மாதுஞ்சும் முன்றில்
செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்
ஒளிறிலங்கும் அருவிய மலைகிழ வோனே"

"கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி
பரந்திலங்கு அருவியோடு நரந்தம் கனவும்
ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்"

எனச் சங்க நூல்கள் ஆங்காங்குக் குறிப்பிடுதலும், அப் பகுதிகளுக்கு உரையாசிரியர்கள்,

"கான யானை தந்த விறகு என்றது,
இவன் தவ மிகுதியான் அதுவும் ஏவல் செய்தல்"

"மந்தி சீத்தலும் மாத் துஞ்சலும் களிறு விறகுதருதலும்
இருடிகள் ஆணையால் நிகழ்ந்தன என்றுணர்க"

"அருவியோடு நரந்தம் கனவும் என்றது, அவ்வாரியர்
ஆணையானே பிறவிலங்கானும் மக்களானும்
வருத்தம் இன்றிப் பகற்காலத்துத் தான்
நுகர்ந்த அருவியையும் நரந்தம்
புல்லையுமே கனவினும் காணும் என்றவாறு"

என விளக்கம் எழுதியிருத்தலும், நாம் சிந்தித்து உணரத் தகுந்த செய்தியாகும்.

சுவாமிகளைப் போன்ற பெருமக்களின் திருப்பணிகளால் சைவமும் தழைத்தினிதோங்கி மறுமலர்ச்சி பெற்று ஒளிவீசித் திகழும் காலம், மிக அண்மையில் உள்ளமை புலனாகின்றது...வாழ்க சைவம்! வளர்க தமிழ்!

# Samajam Buildings Trust

THIS MEMO OF AGREEMENT entered into at Madras on this 25th day of July 1962 between the Saiva Siddhanta Maha samajam, a Society registered under the Indian Socieities Act, represented by its Secretary, G. Kaliyanam Pillai, having its office for the time being at No. 12, East Mada Street, Mylapore, Madras-4 herein after called the Party of the first part and A. Somasundaram Chettiar, son of Annamalai Chettiar, Hindu, vaniga vysia, merchant, aged 75 years, residing at No. 15, East Mada Church Street, Royapuram, Madras hereinafter called the Party of the Second Part.

Whereas the party of the first part expressed a desire to purchase immovable properties for the purpose of securing a permanent place for the activities of the Samajam and for the purpose of augmenting its financial position by renting part of the premises and the party of the Second Part who has been long connected with the Samajam and is its sympathiser and supporter came forward to donate a substantial amount towards the purchase of the properties mentioned in the schedule hereto and the party of the first part ageed to abide by the conditions and covenants the party of the Second part may impose and whereas the party of the First Part have purchased with the donations made by the party of the 2nd part and from its own funds the property mentioned in the schedule in its own name and title and whereas in consequence thereof the parties hereto think it expedient and desirable to reduce into writing the conditions and covenants that the party of the second part wish to impose to which the party of the first part agreed to hereunder as below:—

Now this Memorandum witnesseth:—

1. The management of and rentals derived from the whole or part of the property described in the schedule hereto shall be under the control and supervision of a Trust Board constituted for the purpose as hereunder.

2. The Board shall comprise of 5 persons of whom 3 shall be members of the Samajam. The first Board shall comprise of:

1. Sri A. Somasundaram Chettiar, party of the Second part

2. Sri Rao Sahib N. Murugesa Mudaliar, Retired Deputy Secretary to Government, residing at No 51 Big Street, Triplicane,

3. Sri S. Sachidanandam Pillai, Retired District Educational officer, residing at No. 175-A, Lloyd's Road Royapettah,

4. Sri N. R. Murugavell, M. A. M. O. L., residing at No. 73, Kotwalchavadi Street, Saidapet, Madras.

5. Sri Sivanesan chettiar, proprietor, Bhavani Jewellery. Triplicane, Madras, residing at No. 7, Sivaraman Street, Triplicane, Madras.

3. Sri A. Somasundaram Chettiar, shall be the Life President and Managing Trustee. After his life time, his Son-in-law Sri M. S. Rathnavelu Chettiar and after him one of Sri A Somasundaram chettiar's major male grand-children through his only daughter Smt. Sakuntala (wife of the Said Rathnavelu chettiar) shall be one of the trustees. If none of these is willing to take the trusteeship, one member of the trusteeship, one member of the Trust Board shall be elected by the South India Vaniyar Education Trust, a Registered Society having its office for the time being at No. 43, Spur Tank Road, Egmore, of which the party of the second part is a member and promoter.

4. During the life time of Sri A. Somasundaram Chettiar, casual vacancies in the Trust Board by death, resignation, physical or legal disability shall be filled up by him. After his life-time, trustees other than the successors of Sri A. Somasundaram chettiar and Ex-officio Trustees as mentioned below shall be filled up by co-option by the Trust Board.

In the subsequent Board, the president and secretary of the Samajam, the party of the First part shall be

ex-officio members. If any of these is not willing or able to take up the trusteeship, his place shall be filled up by the samajam by election by its Executive committee from among the members of the Samajam.

All the Trustees shall be Hindus professing saivite faith and shall be permanent residents of the City of Madras.

The president of the Samajam, party of the first part shall be the Ex-officio president of the Trust-Board, after the life time of the party of the second Part. The trustees other than hereditary and Ex. officio trustees shall hold office for a period of 3 years from the date of appointment and shall be eligible for re-election or re-appointment. The hereditary trustee shall however hold office during his life-time. But the Trustee elected by the South India Vaniar Education Trust shall hold office for three years only.

5. The Trustees shall decide how much of the premises should be taken up for the use of the Samajam, which is the purpose for which the property has been purchased, and how much shall be rented out, and shall review the position in January each year and record its decision by a resolution. The Trustees shall set apart out of the nett rental collections (of whole or part of premises rented out) remaining after paying the taxes and other public out goings and executing the necessary repairs, the 10 percent thereof till the amount accumulates to Rs. 500/- (Rupees five hundred) which shall be kept as a reserve fund for any emergency or for capital additions to the property. If any amount is spent from this reserve fund, the amount spent shall be recouped from subsequent rental collections, within a year.

The balance amount shall be utilised for (1) renting a suitable premises for housing the Samajam till such time the property in the schedule is suitably altered or added to and the Samajam is located therein (2) employing or contributing towards the employment of teachers for teaching boys, girls and elderly persons, melodious singing of Thevaram and saivite devotional songs, generally on the

lines mentioned in the 'Thevara Thirattu' published by Sri A. Somasundaram Chettiar.

(6) Carrying on propaganda of Saivite religion in accordance with the aims of the Samajam (a) by arranging for the delivery of lectures relating to Saiva Religion and philosophy. (b) by printing leaflets relating to Saivite religion and philosophy and distributing the same free or at a nominal price; (c) by printing books or contributing towards the printing of books relating to saiva religion and philosophy and selling them at cheap prices (d) for incidental expenditure like legal expenses etc.,

Not less than half of the available amount shall be spent on object no. 2.

6. The quorum for a meeting of the trustees shall be three and if votes are equally divided the chairman of the meeting will exercise his casting vote.

(a) The president shall be the Managing Trustee; the Managing trustees shall arrange to submit the accounts of the Trust (from July to June) duly audited once in a year to the Executive Committee of the Saiva Siddhanta Maha Samajam by September, every year for being placed before the General Body meeting of the Samajam at the time of the annuall Samajam conference.

(b) The General Body of the Samajam will have the power to scrutinize the accounts of the Trust-Board and the purposes for which the income from the Trust property has been expended and take such action as may be found necessary to secure the due compliance of the spirit and conditions of the Trust.

(c) A. Somasundaram Chettiar, during his life-time will have the sole discretion regarding the allotment of amounts for the several objects of the Trust as laid down above and in the appointment of Teachers in accordance with the objects mentioned above.

7. The Samajam has this day handed over possession of the properties described in the schedule to the First Trust Board and the Trustees have taken possession of the

property from this day and manage the Trust according to the terms and conditions aforesaid

8, The Trust Board shall be called the "SAIVA SIDDHANTA MAHA SAMAJAM BUILDINGS TRUST BOARD"

**Schedule of Property.**

Bazaars and ground bearing Municipal Door Nos 2, 3 and 4 and situate on the western row of Evening Bazzar Road, Park Town, Madras and bearing old Survey No 41, Re-surveyNo 10121/16present Re-survey No.10121/23 comprised in collector's certificate No. 94 and bounded on the Northby Bazaar No. 5, Evening Bazaar Road, on the east by Evening Bazaar Road, on the south by lane connecting Evening Bazaar Road and Nainiappan Naicken Street and on the west by Nainiappan Naicken Street and situate in the registration sub-district of Sowcarpet, and registration district of Madras - Chingleput and measuring east to west 24 feet and North to South 29¼ feet or thereabouts on the Eastern side and 28½ feet or thereabouts on the Western side.

The value of the property is Rs. 18,750/-

The witness whereof, the parties abovenamed have set their hands, on the day and year first above written.

Signed and delivered by G. Kaliyanam Pillai, the Secretary of the First part party in the presence of:
Witnesses:— 1. K. Krishnappa Chetty 2. V. Kumaraswami Pillai.

(Sd.) G. KALIYANAM.

Signed and delivered by A. Somasundaram Chettiar, the party of the 2nd part in the presence of:
Witnesses:— 1. K. Shanmughasundaram 2. K Krishnappa Chetti.

(Sd.) A. Somasundaram

Registered in the office of the Sub-Registrar of Sowcarpet as No. 622 of 1962 in Book-1 Volume 219 pages 326 to 332 on 26—7—1962.

(Sd.) K. Ratnam,
Sub-Registrar.

# வைப்புத் தலங்கள்

(தி. கி. நாராயணசாமி நாயுடு)

நடைமுறையில் தேவாரப் பதிகமுள்ள ஊர்களைப் பாடல் பெற்றதலம் என்றும், பதிகம் பெற்றோ, பெறுமலோ இன்று பதிகமின்றித் தேவாரப் பாசுரங்களில் காணப்பெறும் திருப்பதிகளை வைப்புத்தலம் என்றும் கூறுவது மரபு.

வைப்புத் தலங்களில் பல இருக்கும் இடம் தெரியவில்லை. ஆனால் இவையாவையென அறிய முதன் முதல் தேவாரப் பதிப்புக்களில் அச்சிட்ட வைப்புத் தலப்பட்டியல்களே அடிகோலின. வைப்புத் தலங்கள் தொகுத்துக்கூறும் தனிப் பாடல்கள் (7) தனியே வழங்கி வருகிறது. அஃது ஆய்வின்றி வெளிவந்தது.

முதன் முதல் வைப்புத் தலப்பட்டியலுடன் வெளிவந்த தேவாரப் பதிப்பு, இராமசாமிப் பிள்ளை (ஞானசம்பந்தம் பிள்ளை) தலைமுறைப் பதிப்பாகும். இது ஊ. புஷ்பரதச் செட்டியாரது கலா ரத்நாகர அச்சுக்கூடத்தில் 1881–ல் அச்சிடப் பட்டது. அதில் 249 வைப்பு ஊர்கள் உள்ளன. இப்பட்டியலில் பேறனூர் இருமுறை பிழையாக அச்சிடப்பட்டுள்ளது. இப்பட்டியல் அபிதானசிந்தாமணியில் 1934-ல் அப்படியே வெளிவந்தது. இதனை அடுத்துக் காணியம்பாக்கம் முரு. சண்முக முதலியாரது ரிப்பன் பிரஸ் (1898) தலமுறைப் பதிப்பு. இதிலும் அப்பட்டியல் அப்படியே உள்ளது. வைப்புத் தலப்பட்டியல் இல்லாத தலமுறைப் பதிப்புகளைச் செந்தில் வேலு முதலியார் 1893-லும், சுவாமிநாத பண்டிதர் 1911-லும் வெளியிட்டார்கள். பங்காளம் அப்புப் பிள்ளை 1907–லும் 1916–லும் இருமுறை சென்னை திராவிட புத்தக டிபோ மூலம் வெளியிட்டார்கள். இப்பதிப்புகளில் கண்ட வைப்புத் தலப்பட்டியல்களில் மேற்கண்ட பட்டியலை அகர வரிசைப்படுத்திப்பேறனூர் இருமுறை அச்சிட்டதைக் களைந்து 248 ஊர்களாக வகுத்தார்கள். வைப்புத் தலப்பட்டியல் இல்லாத பண்முறைப் பதிப்புகள் பல வெளிவந்தன. அவை வருமாறு:—

1. காஞ்சீபுரம் வித்வான் சபாபதி முதலியார் பார்வையில் திருமயிலை சுப்புராய ஞானியார் பகுதி பகுதிகளாக வெளிப்பட்டவை சம்பந்தர்: 1863, 1877 அப்பர்: 1866 சுந்தரர்: 1875.

இவற்றை அடுத்தது புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் மாணவர், திருமயிலை வித்வான் சண்முகம் பிள்ளை

பார்வையிட்ட பிருங்கிமாநகரம் வே. நமசிவாய முதலியார் (1917) பதிப்பு. கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் பார் வையிட்ட கழகப் பதிப்பு 1927 - 1929-ல் வெளிவந்தன. சமாஜம் 1929 -- 31-ல் வெளியிட்டது. திருப்பனந்தாள் மடத்துப் பதிப்பு 1949 - 50-ல் ஆசிரியர் முறையில் தனித் தனியே தலமுறையில் வெளிவந்தன. மேலே காட்டிய பதிப்புகளில் கண்ட வைப்புத் தலப்பட்டியல்களைக் காண்க.

## வைப்புத் தலங்கள் முதலில் வெளியான பட்டியல்படி

1 திங்களூர்
நங்களூர்
தங்களூர்
எங்களூர்
5 பாசனூர்
நாசனூர்
ஈசனூர்
தேசனூர்
கூறனூர்
10 ஏறனூர்
தேறனூர்
பேறனூர்
காட்டூர்
மாட்டூர்
15 பூழியூர்
ஆழியூர்
வேலனூர்
மூலனூர்
நாலனூர்
20 வேங்கூர்
நாங்கூர்
பொன்னூர்
தென்னூர்
தாழையூர்
25 கூழையூர்
ஏழூர்
தோழூர்
விடங்களூர்
கடங்களூர்
30 முந்தையூர்
பந்தையூர்
மறையனூர்
நிறையனூர்
பிறையனூர்
35 இறையனூர்
முதல்வனூர்
நம்பனூர்
பாய்ஞலூர்
தேரூர்
40 பேரூர்
மாவூர்
பிடவூர்
கோவந்தபுத்தூர்
தேனூர்
45 ஆமாவூர்
அளப்பூர்
ஊற்றத்தூர்
மாற்றூர்
சேற்றூர்
50 நல்லாற்றூர்
ஏமப்பேறூர்
குன்றியூர்
செங்குன்றூர்
வெற்றியூர்
55 மூவலூர்
கருப்பூர்
தேவனூர்
ஏமநலலூர்

பெருமூர்
60 பேராவூர்
வாதவூர்
வழுவூர்
நியமநல்லூர்
பொய்கைநல்லூர்
65 வடபேறூர்
கொடுங்கோளூர்
தகட்டூர்
துடையூர்
தக்களூர்
70 முழையூர்
வேலூர்
விளத்தூர்
துவையூர்
நாவலூர்
75 தஞ்சைஎழுமூர்
கூந்தலூர்
கச்சையூர்
பனங்காட்டூர்
கூடூர்
80 போற்றூர்
காற்றூர்
கறையூர்
பாட்டூர்
மூதூர்
85 பேறனூர்
அரணநல்லூர்
கொடுங்கோவலூர்
குழையூர்
பொய்கை
90 நெற்குன்றம்
நற்குன்றம்
திருமலை
பொதியின்மலை
மகாமேருமலை
95 உதயமலை
அத்தமயனமலை
மகேந்திரமலை
ஏமகூடமலை
கந்தமாதனமலை
100 விந்தமாமலை
சையமலை
நீலமலை
கொல்லிமலை
மந்தாரம்
105 இராப்பட்டீச்சுரம்
மயிண்டீச்சுரம்
திண்டீச்சுரம்
வெகுளீச்சுரம்
மாகாளேச்சுரம்
110 அயனீச்சுரம்
அத்தீச்சுரம்
ஆடகேச்சுரம்
அகத்தீச்சுரம்
நந்திகேச்சுரம்
115 தேவீச்சுரம்
வேதீச்சுரம்
விவீச்சுரம்
ஏயீச்சுரம்
அக்கீச்சுரம்
120 குக்குடேச்சுரம்
நாகளேச்சுரம்
சோமேசம்
குருந்தங்குடி
மாணிகுடி
125 விடைவாய்க்குடி
கருந்திட்டைக்குடி
கடையக்குடி
செம்பங்குடி
புற்குடி
130 மத்தங்குடி
குத்தங்குடி ,
சாலைக்குடி
தனிச்சாத்தங்குடி
புதுக்குடி

135 தென்களக்குடி
நல்லக்குடி
கிள்ளிக்குடி
திருவண்குடி
மாகுடி
140 இடைப்பள்ளி
கொல்லியறைப்பள்ளி
பரப்பள்ளி
பொருப்பள்ளி
தவப்பள்ளி
145 சிவப்பள்ளி
அறப்பள்ளி
சிறப்பள்ளி
நெடுவாயில்
நெய்தல்வாயில்
150 குணவாயில்
அண்ணல்வாயில்
ஞாமுல்வாயில்
இடைக்குளம்
தஞ்சைத்தளிக்குளம்
155 பாற்குளம்
திருக்குளம்
விளைக்குளம்
கஞ்சாறு
தெள்ளாறு
160 வெள்ளாறு
நாலாறு
பழையாறு
பூந்துறை
தவத்துறை
165 கோடுக்காடு
பனங்காடு
நிறைக்காடு
மிறைக்காடு
இறைக்காடு
170 தண்டலையாலங்காடு
ஞாழற்கோயில்
மணிக்கோயில்
கச்சிப்பலதளி
குரக்குத்தளி
175 ஆறைமேற்றளி
மாதானம்
இடைத்தானம்
நாற்றானம்
தஞ்சாக்கை
180 பஞ்சாக்கை
குருக்கேத்திரம்
விராடபுரம்
மாநிருபம்
சித்தவடம்
185 கொங்கணம்
காளிங்கம்
உஞ்சேனைமாகாளம்
இடவை
பிரம்பில்
190 மணற்கால்
கருமாரி
களப்பாழ்
காம்பீலி
நாட்டுத்தஞ்சை
195 தஞ்சை
காரிகரை
இறையான்சேரி
வாரணசி
அசோகந்தி
200 தண்டந்தோட்டம்
தண்டங்குறை
சடைமுடி
அரிச்சந்திரம்
புலிவலம்
205 மாநதி
குமரி
சூலமங்கை
புரிசை
சீக்காலி
210 திருவேட்டி

| | | | |
|---|---|---|---|
| | மணிமுத்தம் | | கீழையில் |
| | கச்சிமயானம் | | கீழையம் |
| | விளத்தொட்டி | | திருஆதிரையான் பட்டினம் |
| | உருத்திரகோடி | | கீழைவழி |
| 215 | பாவநாசம் | 235 | தேவன்குடி |
| | கொண்டல் | | கொடுமுடி |
| | கண்ணை | | தென்கோடி |
| | காறை | | கொங்கு |
| | வளவி | | கொழுநல் |
| 220 | நல்லாலை | 240 | பட்டி |
| | திரிபுராந்தகம் | | கருகற்குரல் |
| | கோட்டுக்கா | | பருத்திநியமம் |
| | மாகோணம் | | நல்லேமம் |
| | சுழியல் | | மாகாளம் |
| 225 | காவம் | 245 | பெருந்துறை |
| | வரந்தை | | வடமாகறல் |
| | எச்சில்இளமர் | | படம்பக்கம் |
| | உண்ணீர் | | அங்கணம் |
| | கோத்திட்டை | 249 | ஆறை |
| 230 | கரபுரம் | | |

குறிப்பு:—பேறனூர் 12, 85 எண்ணுடையதாக இருமுறை வருவது காண்க.

## வைப்புத்தலங்கள்—அகர நிரலில்

| | | | |
|---|---|---|---|
| 1 | அகத்தீச்சுரம் | 15 | ஆழியூர் |
| | அக்கீச்சுரம் | | ஆறை |
| | அங்கணம் | | ஆறைமேற்றளி |
| | அசோகந்தி | | இடவை |
| 5 | அண்ணல்வாயில் | | இடைக்குளம் |
| | அத்தமயனமலை | 20 | இடைத்தானம் |
| | அத்தீச்சுரம் | | இடைப்பள்ளி |
| | அயனீச்சுரம் | | இராப்பட்டீச்சுரம் |
| | அரணநல்லூர் | | இறைக்காடு |
| 10 | அரிச்சந்திரம் | | இறையான்சேரி |
| | அளப்பூர் | 25 | இறைவனூர் . |
| | அறப்பள்ளி | | ஈசனூர் |
| | ஆடகேச்சுரம் | | உஞ்சேனைமாகாளம் |
| | ஆமாவூர் | | உண்ணீர் |

உதயமலை
30 உருத்திரகோடி
ஊற்றத்தூர்
எங்களூர்
எச்சில்இளமர்
ஏமகூடமலை
35 ஏமநல்லூர்
ஏமப்பேரூர்
ஏயிச்சுரம்
ஏழூர்
ஏவனூர்
40 கச்சிப்பலதளி
கச்சிமயானம்
கச்சையூர்
கஞ்சாறு
கடங்களூர்
45 கடையக்குடி
கண்ணை
கந்தமாதனமலை
கரபுரம்
கருங்கற்குரல்
50 கருந்திட்டைக்குடி
கருப்பூர்
கருமாரி
களப்பாழ்
கறையூர்
55 காட்டூர்
காம்பீலி
காரிகரை
காவம்
காளிங்கம்
60 காறை
காற்றூர்
கிழையம்
கிள்ளிகுடி
கிழையில்
65 கிழைவழி
குக்குடேச்சுரம்
குணவாயில்
குத்தங்குடி
குமரி
70 குரக்குத்தளி
குருக்கேத்திரம்
75 குருந்தங்குடி
குழையூர்
குன்றியூர்
கூந்தலூர்
கூரூர்
கூழையூர்
80 கூறனூர்
கொங்கணம்
கொங்கு
கொடுங்கோவலூர்
கொடுங்கோளூர்
கொடுமுடி
கொண்டல்
85 கொல்லிமலை
கொல்லிஅறைப்பள்ளி
கொழுநல்
கோட்டுக்கா
கோட்டுக்காடு
90 கோத்திட்டை
கோவந்தபுத்தூர்
சடைமுடி
சாலைக்குடி
சித்தவடம்
95 சிவப்பள்ளி
சிறப்பள்ளி
சிக்காலி
சுரியல்
சூலமங்கை
100 செங்குன்றூர்
செம்பங்குடி
சேற்றூர்
சையமலை
சோமேசம்

105 ஞாழல்வாயில்
ஞாழற்கோயில்
தகட்டூர்
தக்களூர்
தங்களூர்
110 தஞ்சாக்கை
தஞ்சை
தஞ்சைத்தளிக்குளம்
தஞ்சைஎழூமூர்
தண்டங்குறை
115 தண்டந்தோட்டம்
தண்டலையாலங்காடு
தவத்துறை
தவப்பள்ளி
தனிச்சாத்தங்குடி
120 தாழையூர்
திங்களூர்
திண்டீச்சுரம்
திரிபுராந்தகம்
திருக்குளம்
125 திருமலை
திருவண்குடி
திருவாதிரையான் பட்டினம்
திருவேட்டி
துடையூர்
130 துவையூர்
தெள்ளாறு
தென்களக்குடி
தென்கோடி
தென்னூர்
135 தேசனூர்
தேரூர்
தேவனூர்
தேவனகுடி
தேவீச்சுரம்
140 தேறனூர்
தேனூர்
தோழூர்
நங்களூர்
நந்திகேச்சுரம்
145 நம்பனூர்
நல்லக்குடி
நல்லாவூர்
நல்லாற்றூர்
நல்லேமம்
150 நற்குன்றம்
நாகளேச்சுரம்
நாங்கூர்
நாசனூர்
நாட்டுத்தஞ்சை
155 நாலனூர்
நாலாறு
நாலூர்
நாற்ருனம்
நியமநல்லூர்
160 நிறைக்காடு
நிறையனூர்
நீலமலை
நெடுவாயில்
நெய்தல்வாயில்
165 நெற்குன்றம்
பஞ்சாக்கை
படம்பக்கம்
பட்டி
பந்தையூர்
170 பரப்பள்ளி
பருத்திநியமம்
பழையாறு
பனங்காடு
பனங்காட்டூர்
175 பாசனூர்
பாட்டூர்
பாய்ஞலூர்
பாவநாசம்
பாற்குளம்

180 பிடவூர்
பிரம்பில்
பிறையனூர்
புதுக்குடி
புரிசை
185 புலிவலம்
புற்குடி
பூந்துறை
பூழியூர்
பெருந்துறை
190 பெருமூர்
பேராவூர்
பேரூர்
பேறனூர்
பொதியின்மலை
195 பொய்கை
பொய்கைநல்லூர்
பொருப்பள்ளி
பொன்னூர்
போற்றூர்
200 மகாமேருமலை
மகேந்திரமலை
மணற்கால்
மணிக்கோயில்
மணிமுத்தம்
205 மத்தங்குடி
மந்தாரம்
மயிண்டீச்சுரம்
மறையனூர்
மாகாளம்
210 மாகாளேச்சுரம்
மாகுடி
மாகோணம்
மாட்டூர்
மாணிகுடி
215 மாதானம்
மாநதி
மாநிருபம்
மாவூர்
மாற்றூர்
220 பிறைக்காடு
முதல்வனூர்
முந்தையூர்
மூதூர்
மூவலூர்
225 மூலனூர்
மூழையூர்
வடபேரூர்
வடமாகறல்
வரந்தை
230 வழுவூர்
வளவி
வளைக்குளம்
வாதவூர்
வாரணாசி
235 விடங்களூர்
விடைவாய்க்குடி
விந்தமாமலை
விராடபுரம்
விளத்தூர்
240 விளத்தொட்டி
விவீச்சுரம்
வெகுளீச்சுரம்
வெள்ளாறு
வெற்றியூர்
245 வேங்கூர்
வேதீசுரம்
வேலனூர்
248 வேளூர்

# வைணவத் தலங்கள் (பெருமாள் கோயில்கள்)

(தி. கி. நாராயணசாமி நாயுடு, கடலூர் N. T.)

ஆழ்வார் அருளிச் செயலில் கண்ட திவ்ய தேசங்கள் 108 என்பர். இவற்றை மங்களாசாசனம் பெற்றவை என்று கூறுவது வைணவ மரபு. இந்த 108 இடங்களும் (i) பதிகமும் பாடலும் (ii) பதிகம் மட்டில் (iii) பாட்டு மட்டில், பெற்று மூன்று வகையாக இருக்கின்றன. (இவை யாவும் சேர்ந்தே 108 ஆகும்) சிவன் கோயில்களில் பதிகம் பெற்றவை (பாடல் பெற்றது 274) பாட்டு பெற்றவை(வைப்புத்தலம் சுமார் 260) என்ற இருபிரிவுகள் உண்டு. அவை வருமாறு:—

1 அட்டபுயகரம் ‡ 2
அத்தியூர் * 3
அநந்தபுரம் † 1
அயோத்தி ‡ 5
5 அரங்கம் * 11
அரிமேய விண்ணகரம் † 1
அல்லிக்கேணி ‡ 3
அழுந்தூர் ‡ 1
அன்பில் * 1
10 ஆதனூர் * 1
ஆய்ப்பாடி * 3
ஆலி–திருநகரி ‡ 2
இடவெந்தை ‡ 1
இந்தளூர் ‡ 1
15 ஊரகம் * 2
எவ்வுள் ‡ 2
கடல்மல்லை ‡ 2
கடிகை * 2
கடித்தானம் † 1
20 கண்டங்கடிநகர் † 1
கண்டியூர் * 1
கண்ணங்குடி † 1
கண்ணபுரம் ‡ 5
கண்ணமங்கை ‡ 1
25 கரம்பனூர் * 1
கவித்தலம் * 1
கள்வனூர் * 1
காட்கரை † 1
காரகம் * 1
30 கார்வானம் * 1
காவளம்பாடி † 1
காழி–சீராம விண்ணகரம் † 1
குடந்தை ‡ 7
குருகூர் † 1
35 குளந்தை * 1
குறுங்குடி ‡ 4
கூடலூர்
கூடல் * 2
கோட்டியூர் ‡ 5
40 கோவலூர் ‡ 3
கோழி * 1
கோளூர் ‡ 1
சாளக்கிராமம் ‡ 2
சிங்கவேள்குன்றம் † 1
45 சித்ரகூடம் ‡ 2
சிரீவரமங்கை † 1
சிறுபுலியூர் † 1
செங்குன்றூர் † 1
செம்பொன்செய் கோயில் † 1
50 சேறை ‡ 1
தஞ்சைமாமணிக் கோயில் * 2

தண்கா * 1
தண்கால் * 2
தலைச்சங்கநாண்மதியம் * 1
55 துவராபதி * 5
தெற்றியம்பலம் † 1
தேவனூர்தொகை † 1
தொலைவில்லிமங்கலம் † 1
நந்திபுரவிண்ணகரம் † 1
60 நறையூர் ‡ 1
நாகை † 1
நாவாய் ‡ 2
நிலாத்திங்கள்துண்டம் * 1
நின்றவூர் * 1
65 நீரகம் * 1
நீர்மலை ‡ 2
நைமிசாரண்யம் † 1
பரமபதம் * 8
பரமேச்சுரவிண்ணகரம் † 1
70 பவளவண்ணம் * 1
பாடகம் * 4
பார்த்தன்பள்ளி † 1
பாற்கடல் * 10
பிரிதி 1
75 புட்குழி * 1
புலியூர் 2
புல்லாணி 1
புளிங்குடி 1
புள்ளம்பூதங்குடி † 1
80 பேரெயில் † 1
பேர்நகர் ‡ 4
மணிக்கூடம் † 1
மணிமாடக்கோயில் † 1
மாலிருஞ்சோலை ‡ 6
85 மூழிக்களம் ‡ 2
மெய்யம் * 1
மோகூர் ‡ 2
வடமதுரை ‡ 5
வண்பரிசாரம் * 1
90 வண்புருடோத்தமம் † 1
வண்வண்டூர் † 1
வதரியாச்சிரமம் ‡ 2
வயித்திரபுரம் † 1
வரகுணமங்கை * 1
95 வல்லவாழ் ‡ 2
வாட்டாறு † 1
வாறன்முளை † 1
விண்ணகர் ‡ 3
வித்துவக்கோடு † 1
100 வில்லிபுத்தூர் * 2
வெஃகா * 5
வெள்ளக்குளம் † 1
வெள்ளறை ‡ 2
வெள்ளியங்குடி † 1
105 வேங்கடம் ‡ 10
வேளுக்கை * 2
வைகுந்தம் * 1
108 வைகுந்தவிண்ணகரம் ‡ 1

இப்பட்டியலில் தலப்பெயருக்கு இவற்றில் உள்ள குறிகளின் விளக்கம் வருமாறு:—* பாட்டு பெற்றவை † பதிகம் பெற்றவை ‡ பதிகமும் பாட்டும் பெற்றவை. இவற்றில் உள்ள எண்கள் பாட்டு, அல்லது பதிகமும் பெற்றதன் தொகை. சைவத்தலமான காளத்தியைச் சைவர் தொண்டை நாட்டைச் சேர்ந்ததென்பர். அதன் அண்மையில் உள்ள வைணவக் கோயிலான வேங்கடத்தை வைணவர் வடநாட்டுத் தலமாக வகைப்படுத்தியுள்ளார்கள். இந்த 108–ல் ஆழ்வார்

களில் ஒருவரால்மட்டும் கூறப்பட்டவை 67. அவை (தல வரிசை எண்படி) 3, 6, 8—10, 13, 14, 19—22, 24—32, 34, 35, 37, 41, 42, 44, 46—50, 52, 54, 56—61, 63—65, 67, 69, 70, 72, 74, 75, 77—80, 82, 83, 86, 89—91, 93, 94, 96, 97, 99, 102, 104, 107, 108.

திருப்பாணாழ்வார் (3) 5, 68, 105. தொண்டரடிப் பொடியார் (4) 4, 5, 73, 88. பொய்கையார் (6) 5, 40, 68, 73, 101, 105 (98-யும் குறிப்பதாகவும் மரபு உண்டு) குலசேகரர் (8) 4, 5, 12, 23, 45, 73, 99, 105. ஆண்டாள் (11) 5, 11; 23, 33, 55, 68, 73, 84, 88, 100, 105. பூதத்தாழ்வார் (13) 2, 5, 17, 33, 39, 40, 51, 53, 66, 71, 73, 84, 105. பேயாழ்வார் (15) 1, 2, 5, 7, 18, 33, 39, 68, 71, 73, 84, 98, 101, 105. 106. திருமழிசையார் (17) 5, 7, 9, 15, 16, 26, 33, 36, 38, 39 55, 68, 71, 73, 81, 101, 105. பெரியாழ்வார் (19) 4, 5, 10, 20, 23, 33, 36, 39, 43, 55, 68, 73, 81, 84, 88, 92, 100, 103, 105. நம்மாழ்வார் (36) 3—5, 19, 23, 28, 33—36, 42, 46, 48, 55, 58, 62, 68, 73, 76, 78, 80, 81, 84, 85, 87—89, 91, 94—98, 101, 105, 107. திருமங்கைமன்னன் (86) 1, 2, 4—8, 10—18, 21—25, 27, 29—33, 36—41, 43—45, 47, 49—57, 59—77, 79, 81—88, 90, 92, 93, 95, 98, 101—106, 108.

காணமுடியாத பாற்கடல், பரமபதம் ஆகிய இருதலங்களையும் நீக்கிப் பிருந்தாவனம், கோவர்த்தனம் ஆகிய இரண்டையும் சேர்ப்பது இக்கால வழக்கு. இது பண்டைய மரபுக்கு முரணானது. இந்த 108 இடங்களில் இன்றைய தமிழ் நாட்டில் இருப்பவை 83. மற்றவை வடநாட்டிலும், மலை நாட்டிலும் இருப்பவை. பாடல் பெற்ற சிவன் கோயிலும் அருளிச் செயல் பெற்ற பெருமாள் கோயிலும் ஒரே இடத்திலும், ஒரே ஊரில் இரு இடங்களாகவும் உள்ளன. தில்லையில் சித்திரகூடத்தில் கோவிந்தராஜரையும் பொன்னம்பலத்தில் கூத்தப்பெருமானையும் அணைத்து, அடைய வளைந்த ஒரே சுற்றினுள் இருப்பது காணலாம். காஞ்சியில் ஏகம்பர் கோயிலில் நிலாத் திங்கள் துண்டப் பெருமாளும், காமாட்சி அம்மை கோயிலில் கள்வரும் உள்ளனர். அழுந்தூர், திருநின்றவூர், குடந்தை, தலைச்சங்காடு (தலைச்சங்க நாண் மதியம்), வடகுரங்காடுதுறை, நாகை, நாகேச்சுரம்) விண்ணகர்-ஒப்பிலியப்டன்), நறையூர், சேறை, கண்டியூர், உறையூர், அன்பில், மதுரை (கூடல்), கோவலூர், சீர்காழி, முதலிய ஊர்களில் சிறந்த இருகோயில்களும் உள்ளன.

பழநியில் நிகழ்ந்த சமாஜ ஆண்டு விழாவில்
ஆற்றிய சொற்பொழிவு.

# சைவ சாத்திர இலக்கியம்

## திரு. மு, அருணசலம், M. A.

முற்றொடர்ச்சி:

"அருள் வடிவும் தானுமாய் ஆண்டிலனேல்—அந்தப்
பெரு வடிவை யாரறிவார் பேசு."

என்பது திருக் களிற்றுப் படியார் 5 ஆம் பாடல். இதை யொத்த மற்றொரு பாடல் சைவ சமயிகள் எல்லோரும் அறிந்தது, சொற் பொழிவாளர் அனேகர் நாவிலும் பயில்வது;

சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலும் எம் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும் — முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறை நூல் தானெங்கே
எந்தை பிரான் ஐந்தெழுத் தெங்கே?

இப்பாடலைச் சொல்லாத சைவர் இருக்கமாட்டார்கள். ஆனல் இது சிவானந்த மாலையில் பதினொராவது பாடல் என்று அறிந்தவர் எத்தனை பேர்?

சித்தாந்த சாஸ்திரங்கள் பதினன்கையும் அடுத்து அனேக சாஸ்திரங்கள் தோன்றியுள்ளன. அவற்றுள் சிறப்பானது சிவானந்த மாலை என்பது.

இந்த நூலின் பாடல்களை மதுரைச் சிவப்பிரகாசரும், திருப்போரூர்-சிதம்பர சுவாமிகளும் தங்கள் உரைகளில் மேற்கோளாகக் காட்டுகிறார்கள். பெருந்திரட்டில் இது தொகுக்கப் பட்டுள்ளது. அன்றியும் மதுரைச் சிவப்பிரகாசர் இந்நூலைக் குறிப்பிடும் போது "இறை திருவருளைப் பெற்று அனுபவித்த அடியார்களின் வாக்கு" என்று சொல்லுகின்றார். இதனல் மதுரைச் சிவப்பிரகாசர் போன்ற பெரியார் இந்த நூலை எவ்வளவு சிறப்பாகப் போற்றுகிறார்கள் என்பது விளங்கும். இந்நூலை அனவரத விநாயகம் பிள்ளை அவர்கள் மிக அரிதில் முயன்று பதிப்பித்தார்கள்.

இந்நூல் ஆசிரியரையும் காலத்தையும் பற்றி முதலில் அறிய வேண்டும். இதுபற்றி இரண்டு போலிக் கருத்துக்

கள் உலவுகின்றன. ஒன்று, தருமபுர மடத்துச் சிவானந்த தேசிகர் இதைச் செய்தார் என்பது. இத்தேசிகர் காலம் 18 ஆம் நூற்றூண்டு. (1740) 15 ஆம் நூற்றூண்டின் மத்தியில் வாழ்ந்த மதுரைச் சிவப்பிரகாசர் குறிப்பிடும் சிவானந்த மாலையை 18 ஆம் நூற்றூண்டுத் தேசிகர் செய்தல் இயலாது என்பது வெளிப்படை.

இரண்டாவது, சிவானந்த மாலையைக் கண்ணுடைய வள்ளல் செய்தார் என்று கூறுவார்கள். இதை ஆராயும் போது ஓர் உண்மை புலப் படுகின்றது. சிவானந்த மாலையின் 276 ஆம் பாடல் பின் வருவது.

தாணு வினே டத்துவிதம் சாதிக்கும் மாண உனே
ஆணவத்தோ டத்துவிதம் ஆக்கினர் ஆர்-கோணறவே
என்ஞனே, என்ஞனே, என்ஞனே, ஏகம் இரண்டு
என்ஞமல் சும்மா இரு.

இது மதுரைச் சிவப்பிரகாசராலும் மேற்கோள் காட்டப் பட்ட சிறப்புடையது. கண்ணுடைய வள்ளல் பாடிய ஒழிவிலொடுக்கம் என்பது திருப்போரூர்ச் சிதம்பர சுவாமி கள் உரைசெய்த பெருமையுடையது. இதன் 151 ஆவது பாடல் இங்குக் குறிப்பிடத் தக்கது.

என்ஞனே, என்ஞனே, என்ஞனே, ஏக மிரண்
டென்ஞமற் சும்மா இருவென்று — சொன்ஞன்
திருஞான சம்பந்தன் சீகாழி நாடன்
அருளாளன் ஞான விநோதன்

இந்தப் பாடலையும், முன்னே குறிப்பிட்ட சிவானந்த மாலைப் பாடலையும் ஒரு சேரப்பார்க்கும் போது, சிவானந்த மாலையுடையார், "ஏகம் இரண்டு என்ஞமல் சும்மா இரு" என்று உபதேசித்தார் என்றும், அந்த உபதேசத்தை மனத்தில் ஏற்றுக் கண்ணுடைய வள்ளல் இவ்வாறு தம் உபதேச குருவைப் போற்றினர் என்றும் நாம் கொள்ள இடம் ஏற்படுகிறது. எனவே, சிவானந்த மாலையில் வந்த பாடல் குருஉபதேசம் ஆதலால், அந்நூல் பாடினவர் ஒழிவிலொடுக்கம் செய்த கண்ணுடைய வள்ளலுடைய குரு என்றும், அவர் சீகாழி நாட்டினரென்றும், அவர் திருஞான சம்பந்தர் என்றும் நாம் முடிவு செய்யலாம். இந்தத் திருஞான சம்பந்தர் சம்பந்த முனிவர் என்றும் வழங்கப்படுகின்றூர். இவர் சமய ஆசாரியராகிய ஆளுடைய பிள்ளையாரின்

திருநாமத்தைத் தரித்தவர் (ஆளுடைய பிள்ளையார் காலம் 7 ஆம் நூற்றாண்டு.)

இவர் சீர்காழிச் சிற்றம் பல நாடிகளின் மாணாக்கருள் ஒருவர். சம்பந்த பண்டாரம் எனவும் வழங்கப் பெற்றார். இவரிடமிருந்தே பல ஞானபரம்பரைகள் பிரிந்தன. இவருடைய சீடருள் முதலாமவர் காவை அம்பலநாதத் தம்பிரான்.

"வந்தளித்த சம்பந்த மாமுனிவர் — எந்தைபதம்
சென்னியின் மேல் வைத்துச் சிவப் பிரகாசக கருத்தை
அன்னவயற் காவை அம்பலவன் சொன்னான்"

என்ற வரிகள் இதைத் தெளிவாக்கும். இரண்டாம் மாணாக்கர் ஞானப் பிரகாச பண்டாரம். இவர் வழி வந்ததே தருமபுர ஆதீனம். மூன்றாம் மாணாக்கர், சம்பந்த சரணாலயராயிருந்து தத்துவ விளக்கம் செய்தார்; இவருடைய சீடர் திருநெறி விளக்கம், பாடினார். பின்னர் இவரே காழிக் கண்ணுடைய வள்ளல். தாமே ஒரு பரம்பரையைத் தோற்றுவித்தார்.

சம்பந்த முனிவர் பாடிய சிவானந்த மாலை சிறந்த சைவ சித்தாந்த நூல். அரியசமய உண்மைகளை மிக எளிய உவமைகளால் விளக்குகின்றது. நடையோ மிகவும் எளிய இனிய நடை. இந்த நூலில் 414 வெண்பாக்கள் உள்ளன. காளத்தி, அஞ்சந்தி விநாயகர் காப்புச் செய்யுளோடு இந் நூல் தொடங்குகின்றது. காளத்தி, தோணிபுரம் அஞ்சைக் களம், ஆரூர், காழி ஆகிய தலங்கள் இதனுள் கடவுள் வணக்கப் பகுதியுள் குறிப்பிடப் பட்டுள்ளன. இந்நூலினுள்ள சில பாடல்களை இங்குக் கூறுவது பொருத்தமாகும்.

இவர், அவையடக்கம் கூறுவது, நயமாக உள்ளது. தாம் பெரியோர் முன் இந்த நூலைக் கூறப்புகுவது, பாசமானது, சிவனை அனுபவிக்க முயல்வதை ஒக்கும் என்று கூறுகிறார்.

பாசஞ் சிவனை அனுபவிக்கப் பாவிக்கும்
நேசந் தனக்கு நிகராகும் — காசினிமேல்
நன்மார்க்க மொன்று மிலா நானும் பெரியோர் முன்
சன்மார்க்க நூலுரைத்தல் தான்.

பாசம் ஆன்மாவைப் பந்திக்குமேயன்றி ஆண்டவன் முன் அது இல்லை என்றாகி விடும், தாம் பெரியோர் முன் நூல்

உரைக்கத் துணிவது இயலாத செயல் என்று மிக்க அடக்கத்தோடு குறிப்பிடுகின்றார்.

இலக்கியச் சுவை ததும்புகின்ற மற்றொரு பாடலையும் இங்கே குறிப்பிடலாம். ஆன்மா தோன்றிய அன்றே ஆணவம் ஆன்மாவைப் பந்தித்துக் கொண்டிருக்கிறது; இரண்டிற்கும் உறவு ஏற்பட்டிருக்கிறது. ஆனால் ஆன்மாவானது கிடைத்தற்கரிய அருளானந்தத்திலே தோய்ந்து முத்தியை அனுபவிக்கும் நிலையில் ஆணவம் பந்திக்க முடியாமல் போகின்றது;

அந்தமிலா ஆணவமே அன்றுமுதல் இன்றளவும்
வந்த உறவை மறந்தோமே — எந்தையருள்
ஆராத ஆனந்தத் தந்தத்தே எஞ்ஞான்றும்
வாராத முத்தி வர.

இப்பாடல் பழைய தனிப் பாடல் ஒன்றை நினைவூட்டுகின்றது. வறுமையால் மிகவும் துன்புற்ற ஒரு புலவர் காளத்தி அப்பர் என்ற வள்ளலைக் கண்டு பரிசில் பெறும் நோக்கத்துடன் அவர்வாழ்ந்த நின்றை என்ற நின்றியூருக்குச் சென்றார்.

"நாளைக் காலையில் நாம் காளத்தி அப்பனைக் காண்போம். கண்டு அவனிடத்தில் பரிசு பெறும் போது பிறவி தொட்டு நம்மைப் பிடித்துத் துன்புறுத்தி வந்த இவ்வறுமை நோய் அழிந்தொழியும்" என்ற பெருமித உணர்ச்சி அவர் உள்ளத்திலே உதித்தது. அப்போது முதல் நாள் இரவு படுத்துறங்குமுன் இந்த எண்ணத்தோடு நல்குரவை விளித்து "நல்குரவே! இன்றைக்கு மட்டும் நீசற்று என்னோடு இரு. நாளை நீ இருக்க மாட்டாய் அல்லவா!" என்று இரக்கப்பட்டுப் பாடுகிறார்;

நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழல் போல
நாளைக் கிருப்பையோ நல்குரவே! — காளத்தி
நின்றைக்கே சென்றக்கால் நீ எங்கே நானெங்கே
இன்றைக்கே சற்றே இரு.

குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ள வேண்டுமென்று, திருமந்திரம் உபதேசிக்கின்றது. மெய்த்தேசிகன் யாவன் என்று சிவானந்த மாலையும் ஓர் இலக்கணம் வகுக்கின்றது.

மந்திரப்பேய் புத்தகப்பேய் வாசனைப்பேய் பூசனைப்பேய்
தந்திரப்பேய் பாவகப்பேய் தர்க்கப்பேய்-சந்தையினின்று
ஆர்த்தவிர தப்பேய் அனைத்துமொரு வார்த்தையிலே
தீர்த்தவனே மெய்த் தேசிகன். (62)

"நாடிய சத்தி நிபாதம் நாலு பாதம்" என்ற சிவப்பிரகாசம் 48 ஆம் திருவிருத்த உரையில் மதுரைச் சிவப்பிரகாசர் சிவானந்த மாலைப் பாடலை எடுத்து உதாரணங்காட்டுதல் அறிந்து இன்புறத் தக்கது. நான்கும் முறையே வாழைத் தண்டு, பச்சைவிறகு, உலர்ந்த விறகு, கரி என்பவற்றில் தீப் பற்றுவது போல என்பர்;

நாலு வகைச் சத்திநி பாதத்து நற்பருவம்
மூல குருவே மொழிஎனக்குக் — கோல
அரம்பைத்தண் டொண்பச்சைக் காட்டம்உலர்காட்டம்
நிரம்பு கரி நேரா நினை. (40)

இந்த நான்கு வகைச் சத்திநி பாதமும் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்று மதுரைச் சிவப்பிரகாசர் கூறி இவற்றுக்கு அனுபோகமும் கூறுகிறார். முதலாவது, கர்த்தா உண்டென்று அறிவது. இரண்டு, அக்கர்த்தாவைப் பெறும் வழியாது என்று ஆராய்வது. மூன்று, பிரபஞ்சத்தை உவர்த்துப் புளியம்பழமும், தோடும் ஒத்திருப்பது. நான்கு, ஆசாரியனே பொருள் என்று தான் அறநின்று வழி படுகை. இவ்விளக்கத்தைச் சிவானந்த மாலை வேறு விதமாய்க் கூறும்.

மந்ததரம் மெய்யாதி பொய்தோன்றல் மந்தம் கேள்
அந்தமிலா அச்சம் அவையறுத்தல் — பந்த மிகு
தீவ்ரங்கேள் மெய்ஞ்ஞானம் முன்னிரண்டுந் தீர்த்
தெழுந்த
தீவ்ரதரம் மெய் வினையாய்த் தேர்

இவ்வகையான சாத்திர நுட்பங்கள் மிகப் பல உணர்வதற்கு இந்நூல் அருந்துணையாயுள்ளது.* எளிமையாகவும் ஆனால் மிக்க அழுத்தமாகவும் பல்வேறு சாத்திரக் கருத்துக்களை இந்நூல் சுவைப்படக் கூறுகின்றது. சைவ நன் மக்கள் இதை விரும்பிப் பயில வேண்டியவர்கள்.

---

* இந்நூலுக்கு ஒப்பற்றதோர் அனுமதியுரையை ஏட்டிலிருந்து, திரு. அனவரத விநாயகம் பிள்ளையவர்களுக்கு நான் பெயர்த்து எழுதிக் கொடுத்த துண்டு.

# மதிப்புரை

தேவாரத் தலக் குறிப்புக்கள்: இவ் வெளியீடு தமிழ் இலக்கியங்களில் குறிக்கப் பெறும் ஊர்களைக் கண்டு மகிழ விரும்புவார்க்குத் துணை செய்யும் பொருட்டு, இக்கால ஆட்சி முறைப்படி எல்லை அமைந்துள்ள நாடு-கோட்டம் வட்டம்-கூற்றம் முதலிய பாகுபாடுகளை அடிப்படையாகக் கொண்டு, ஒவ்வோர் இலக்கியத்திற்கும் பகுதி பகுதியாக ஊர்களை வகுத்து வெளியிடும் முயற்சியாகும். இம்முதல் வெளியீட்டில், தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள பல தேவாரத்தலங்களுக்குரியகுறிப்புடன் இவ்வெளியீடு அமைந்துள்ளது. இதற்கும், இதனை ஒட்டித் தொடர்ந்து வரும் வெளியீடுகளுக்கும் பொதுவான பல அட்டவணைகளும், நிலப்படங்களும் பின்னர் வெளிவரும்.

நாயன்மார்கள்—ஆழ்வார்கள்—இயல்—இசை— இலக்கணம்—கல்வெட்டு—புரவலர்—புலவர்—மன்னர்—வரலாறு அருவி—அணை—ஆலை—ஆறு—இயற்கை வனப்பு—கோடைக் குடியிருப்பு—என்பன போன்ற சிறப்புடைய ஊர்களைக் பயணத்துணை காண விரும்புபவர்களுக்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

அவ்வவ்வூர்களுக்குச் செல்லுதற்குரிய இருப்புப் பாதை நிலையங்களும். அவ்வவற்றைச் சூழ்ந்து அருகில் உள்ள காணத்தக்க ஊர்களின் பெயர்களும் தரப்பட்டுள்ளன. தல யாத்திரை செய்பவர்களுக்கும், இன்பச் சுற்றுலாச் செல்பவர்களுக்கும் இந்நூல் மிகவும் பயன்படுதற்குரியது.

சமாஜப் பேரன்பர், 'தமிழ்ச் சைவத்தாளாண்மையாளர்' கடலூர் திரு. தி. கி நாராயணசாமி நாயுடு அவர்கள் இதனைப் பெரிதும் முயன்றுழைத்து அரிதில் தொகுத்து வெளியிட்டுள்ளார்கள். இதனைத் தொடர்ந்து இத்தகைய நூல்கள் மற்றும் பல வெளிவர உள்ளன. கிடைக்கும் இடம்:— 2. சீதாராம நகர், கடலூர் N. T. விலை50 காசுகள்.

—ந. ரா. முருகவேள்.

## பிரிவாற்றுமை

சென்னை உயர்நீதி மன்ற நடுவராக விளங்கியவரும், செந்தமிழ்ச் சைவ நலங்களிற் சிறந்து திகழ்ந்தவரும், நமது சமாஜத்தின்பால் பெருமதிப்பும் ஈடுபாடும் மிக்குப் பலமுறை நம் சமாஜ நிகழ்ச்சிகளிற் கலந்துகொண்டு மகிழ்வித்தவரும் ஆகிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் உயர் திரு. வி. சுப்பிரமணிய நாடார் B. A., B. L. அவர்கள், அண்மையில் மறைவுற்றமை குறித்துச் சமாஜம் பெரிதும் வருந்துகின்றது. அவர்தம் ஆருயிர் அம்பலவாணர் திருவடி நிழற்கீழ் வைகி அமைதியின்பம் ஆர்வதாக எனத் திருவருளை வழுத்துகின்றோம்.

## சமாஜ ஆண்டு விழா

சமாஜத்தின் 57 ஆம் ஆண்டு நிறை விழாவுக்குரிய ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. பெரும்பாலும் அது திருவெண்காட்டில் நிகழப் பெரிதும் வாய்ப்புக்கள் உள்ளன. அது பற்றிய முழுவிவரங்கள் அடுத்த இதழில் வெளிவரும்.

## சமாஜத் தேர்வுகள்

யாழ்ப்பாணத்தில் ஸ்ரீலங்கா சைவ ஆதீன நிலையத்திலும், நாகர் கோயில் நன்னெறி மன்றத்திலும் நவம்பர் 17,18 தேதிகளில் காலை மாலை இருவேளைகளிலும் நடைபெறும்.

## எண்பதாம் ஆண்டு விழா

யாழ்ப்பாணம் முதுபெருந் தமிழ்ப் புலவர் உயர்திரு. வ. மு. இரத்தினேஸ்வர ஐயர் அவர்களின் எண்பதாம் ஆண்டுத் தொடக்க விழா யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபையாரால் சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. இப்பெருந் தகையார் இந்தியாவில் 38 ஆண்டுகள் தங்கியிருந்து சைவத் தமிழ்த் தொண்டுகள் பல ஆற்றியவர். சமாஜ விழா மிகப் பல ஆண்டுகளுக்கு முன் பச்சையப்பன் கல்லூரியில் நிகழ்ந்த போது, சொற்பொழிவு ஆற்றியவர். இவர்கள் இன்னும் பன்னெடு நாட்கள் வாழ்ந்திருந்து, சைவமும் தமிழும் தழைக்க நீடினிது தொண்டாற்றிவரத் திருவருளை வழுத்துகின்றோம்.

---

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan. Edited by A. Somasundaram Chettiar, M.A., and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiv-Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.